முழுப்பதிப்புரிமையுடையது

அந்தரங்கமானது



# இலங்கை பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

## 45 - பரதநாட்டியம்
## புள்ளியிடும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன.

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
## க.பொ.த (சா.தர)ப் பரீட்சை – 2022 (2023)
## 45 – பரதநாட்டியம்
## புள்ளி வழங்கும் திட்டம்

பரீட்சார்த்திகள் முதலாம் வினாவையும் வேறு நான்கு வினாக்களையும் தெரிவு செய்து எல்லாமாக ஐந்து வினாக்களுக்கு மட்டும் விடையெழுதும்படி கேட்கப்பட்டுள்ளனர்.

வினாத்தாள் II இற்குரிய மொத்தப் புள்ளிகள் - **60 புள்ளிகள்**

**வினா இல:- 01**

கட்டாய வினா மொத்தப் புள்ளிகள் **மொத்தம் 12 புள்ளிகள்**

**வினா இல:- 02**

(i) பகுதி - 02 புள்ளிகள்
(ii) பகுதி - 04 புள்ளிகள்
(iii) பகுதி - 06 புள்ளிகள்
} **மொத்தம் 12 புள்ளிகள்**

**வினா இல:- 03**

(i) பகுதி - 02 புள்ளிகள்
(ii) பகுதி - 04 புள்ளிகள்
(iii) பகுதி - 06 புள்ளிகள்
} **மொத்தம் 12 புள்ளிகள்**

**வினா இல:- 04**

(i) பகுதி - 03 புள்ளிகள்
(ii) பகுதி - 03 புள்ளிகள்
(iii) பகுதி - 03 புள்ளிகள்
(iv) பகுதி - 03 புள்ளிகள்
} **மொத்தம் 12 புள்ளிகள்**

**வினா இல:- 05**

(i) பகுதி - 02 புள்ளிகள்
(ii) பகுதி - 04 புள்ளிகள்
(iii) பகுதி - 06 புள்ளிகள்
} மொத்தம் 12 புள்ளிகள்

**வினா இல:- 06**

(i) பகுதி - 02 புள்ளிகள்
(ii) பகுதி - 04 புள்ளிகள்
(iii) பகுதி - 06 புள்ளிகள்
} மொத்தம் 12 புள்ளிகள்

**வினா இல:- 07**

(i) பகுதி - 04 புள்ளிகள்
(ii) பகுதி - 04 புள்ளிகள்
(iii) பகுதி - 04 புள்ளிகள்
} மொத்தம் 12 புள்ளிகள்

| | | |
|---|---|---|
| பத்திரம் I | மொத்தப் புள்ளிகள் | 40 |
| பத்திரம் II | மொத்தப் புள்ளிகள் | 60 |
| | | 100 |

விடை அறிவுறுத்தல் : ஒரு சரியான விடைக்கு 01 புள்ளி வீதம் மொத்தப் புள்ளிகள் 40 X 01 = 40, கீழ்க் குறிக்கப்பட்டிருக்கும் உதாரணத்திற்கு அமைய பல்தேர்வு வினாக்களுக்குரிய புள்ளிகளைப் பல்தேர்வு வினாப்பத்திரத்தின் இறுதியில் பதிக

**சரியான விடைகளின் தொகை**

**பத்திரம் I இன் மொத்தப் புள்ளிகள்**

| |
|---|
| 40 |
| 40 |

## க.பொ.த (சாதாரண தர)ப் பரீட்சை - 2022(2023)
## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடலுக்கான பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன் பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற மைப் பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர் ஊதாநிற மைப்பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும் போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும் போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பின்னங்களாகப் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் □ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரீட்சகரினால் புள்ளிகள் பிழையற்றது என உறுதிப்படுத்த நீலநிற அல்லது கறுப்புநிறப் பேனாவினை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) .................................................... ✓ $\frac{4}{5}$
....................................................
....................................................

(ii) .................................................... ✓ $\frac{3}{5}$
....................................................
....................................................

(iii) .................................................... ✓ $\frac{3}{5}$
....................................................
....................................................

(03) $(i)\ \frac{4}{5} + (ii)\ \frac{3}{5} + (iii)\ \frac{3}{5} = \boxed{\frac{10}{15}}$

**பல்தேர்வு விடைத்தாள்**

1. **துளைத்தாள் தயாரித்தல்**

I. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.

II. அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.

III. துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக் கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.

IV. சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.

**V. வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**

2. **அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்து விட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.**
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை √ அடையாளத்தாலும் பிழையான விடையை X அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளினால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும், **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கங்கூடிய இடங்களில் √ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை குறிப்பிடும் போது ஓவலண்ட் கடதாசியின் இடது பக்க நிரலைப் பயன்படுத்தவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன்பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 **இலக்கங்களில் பதியவும்.** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டிவிடவும்.
4. மொத்தப் புள்ளிகளை கவனமாக கூட்டி முன்பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் ஒவ்வொரு விடைக்கும் வழங்கப்பட்டுள்ள புள்ளிகளின் தொகையினை ஒவ்வொரு பக்கமாக கூட்டவும். அக்கூட்டுத்தொகை உங்களால் முன்பக்கத்தில் மொத்தம் எனக் குறிப்பிட்ட மொத்தபுள்ளிகளுக்கு சமமானதா? என பரீட்சிக்கவும்?

**புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

I. ஒரு வினாப்பத்திரம் உள்ள பாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்பட மாட்டாது.

II. ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியான புள்ளிப்பட்டியலில் பதியப்படவேண்டும்.

III. வினாப்பத்திரம் I இற்கான புள்ளிப்பட்டியலில் “Total Marks” என்ற நிரலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

IV. வினாப்பத்திரம் II இற்கான புள்ளிப்பட்டியலை தயார் செய்யும் போது பகுதிப் புள்ளிகளைப் பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப் புள்ளிகளை புள்ளிப் பட்டியலில் “Total Marks” என்ற நிரில் பதியவும்.

V. 43 சித்திரப் பாடத்திற்குரிய I,II மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியிலில் பதிந்து **எழுத்திலும் எழுத வேண்டும்.**

VI. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப் பட்டியிலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப் புள்ளிகளை உள்ளடக்கி அவ் வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை, புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கிய குறிப்பு:**

I. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப் புள்ளியானது முழுத்தானத்தில் புள்ளிப் பட்டியிலில் பதியப்படுதல் வேண்டும். எந்த விதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் இறுதிப் புள்ளியானது தசம தானங்களில் பதியப்படலாகாது.

II. புள்ளிப் பட்டியலின் சகல பக்கங்களிலும் புள்ளிகளைப் பதிந்த உதவிப்பரீட்சகர், புள்ளிகளை சரிபார்த்த உதவிப்பரீட்சகர், மதிப்பீட்டுப் புள்ளிகளை உறுதிப்படுத்தும் எண்கணித பரீட்சகர் மற்றும் பிரதம பரீட்சகர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**45 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தரப்) பரீட்சை, 2022(2023)
General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)

භරත නැටුම් I, II
பரதநாட்டியம் I, II
Bharatha Dancing I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## பரதநாட்டியம் I

அறிவுறுத்தல்கள் :

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

1. நாட்டியத்தினைப் பூலோகத்திற்குக் கொண்டு வந்தவர்
   (1) சிவபெருமான் (2) தண்டு முனிவர் (3) பரத முனிவர் (4) பிரம்மா

2. பாவம், ராகம், தாளம் என்பன
   (1) அபிநயத்தின் உட்பிரிவுகள் (2) நாட்டியத்தின் உட்பிரிவுகள்
   (3) பாவத்தின் இலட்சணம் (4) நாட்டியத்தின் இலட்சணம்

3. "இடி இடித்தது மின்னல் மின்னியது" இதில் 'மின்னல்' என்பதனைக் காண்பிக்கப் பயன்படுத்தப்படும் அசம்யுத ஹஸ்தம்
   (1) அராளம் (2) கர்த்தரீமுகம் (3) சுகதுண்டம் (4) அர்த்தச் சந்திரன்

4. சபா இலட்சணத்தில் கற்றோர்கள் எதற்கு ஒப்பிடப்படுகின்றனர்?
   (1) கிளைகள் (2) தும்பிகள் (3) கற்பக விருட்சம் (4) மலர்கள்

5. பெருவிரலுடன் சுட்டுவிரலை இணைத்து ஏனைய விரல்களை நிமிர்த்திப்பிடித்தால் உருவாகும் அசம்யுத ஹஸ்தம்
   (1) கம்ஸபக்ஷம் (2) மிருகசீர்ஷம் (3) கம்ஸாசியம் (4) சிம்மமுகம்

6. அஞ்சலித்தட்டு, உள்ளங்கைத் தட்டு எனப் பலவகைத் தட்டுக்களைப் பிரயோகித்து ஆடப்படும் கிராமிய நடனம்
   (1) கோலாட்டம் (2) கும்மி (3) ஒயிலாட்டம் (4) குறத்தி

7. பரதநாட்டிய அடவுகளில் உத்பிளவன பாத பேதத்தினை எடுத்துக்கொள்ளும் அடவு
   (1) தித்தெய்ந்ததாதெய் (2) தெய்தெய்தத்தா (3) தாதெய்தெய்தத் (4) திதிதெய்

8. 'வஸ்த்ராச்சாதே' என்பதன் தமிழ் கருத்து
   (1) பொருட்களைத் தொடுதல் (2) பொருட்களை எடுத்தல்
   (3) பொருட்களைப் பிடித்துவிடல் (4) பொருட்களை மூடி வைத்தல்

9. நாட்டியக்கச்சேரி அமைப்பு முறையில் முதன் முதலில் அபிநயப் பகுதியினை வெளிப்படுத்தும் உருப்படி
   (1) சப்தம் (2) வர்ணம் (3) கீர்த்தனம் (4) ஜதீஸ்வரம்

10. நீரில் மூழ்குதல், வெட்கம் என்பவற்றினைப் பிரயோகிக்கப் பயன்படுத்தப்படும் சிரோபேதம்
(1) துதம் (2) அதோமுகம் (3) கம்பிதம் (4) உத்வாகிதம்

11. அவுணர் போரில் தோற்று ஓட முருகன் ஆடிய கூத்து
(1) பேடிக் கூத்து (2) பாவைக் கூத்து (3) மரக்கால் கூத்து (4) குடைக்கூத்து

12. இரணியனின் அகங்காரத்தை அழிக்க பாதி மிருகமாகவும் பாதி மனிதனாகவும் திருமால் எடுத்த அவதாரம்
(1) வாமன அவதாரம் (2) நரசிம்ம அவதாரம்
(3) பலராம அவதாரம் (4) கிருஷ்ண அவதாரம்

13. வீணை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள்
(1) கணிகையர் (2) மாணிக்கத்தார் (3) வைணிகர் (4) வாத்தியக்காரர்

14. 'தெய்ஹத் தெய்ஹீ' அடவின் மறுபெயர்
(1) குதித்து மெட்டடவு (2) தட்டு மெட்டடவு (3) நாட்டடவு (4) பரவல் அடவு

15. நாட்டியப் பெண்ணுக்குத் துணையாக இருக்க வேண்டிய பகிப் பிராணன்களில் ஒன்று
(1) பாடும் ஆற்றல் (2) களைப்பின்மை (3) சுருதி (4) வேகம்

16. உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளை முகத்தினாலும், உடல் உறுப்புகளினாலும் வெளிப்படுத்தப்படும் அபிநயம்
(1) ஆங்கிகா அபிநயம் (2) வாச்சிகா அபிநயம்
(3) ஆகார்யா அபிநயம் (4) சாத்விகா அபிநயம்

17. உடுக்கு வாத்தியத்திற்கு பயன்படுத்தப்படுவது
(1) ஆட்டின் தோல் (2) கன்றின் தோல்
(3) மாட்டின் தோல் (4) எருமை மாட்டின் தோல்

18. தேவஹஸ்தத்தில் வர்ணனைக் காண்பிப்பதற்குப் பயன்படுத்தப்படும் ஹஸ்தத்தினை மாற்றி அபிநயிக்கும்போது உருவாகும் ஜாதி ஹஸ்தம்
(1) சத்திரியர் (2) சூத்திரர் (3) வைசிகர் (4) இராட்சதர்

19. மிருதங்கத்திற்கு 'கனீர்' என்ற ஓசை எழுப்புவதற்குத் தண்ணீரும், ரவையும் கலந்து பூசப்படும் கலவை
(1) கரணை (2) சோறு (3) கஜீ (4) மங்கனீசுப்பொடி

20. இறைவன் கௌரி தாண்டவம் ஆடிய சபை
(1) சித்திரசபை (2) ரஜிதசபை (3) தாம்ரசபை (4) சிற்சபை

21. எட்டுக் கண்டிகைகளைக் கொண்டு ஆக்கப்பட்ட உருப்படி
(1) கௌத்துவம் (2) அஷ்டபதி (3) பதம் (4) ஜாவளி

22. ஆசை நிறைவேறாது விட்டால் மரணத்தை அல்லது மரண மூச்சினை உண்டாக்கும் பாணம்
(1) தாமரை (2) முல்லை (3) நீலோற்பலம் (4) மாம்பூ

23. பாட்டும், ஜதியும் தாளத்துடன் ஒரே நேரத்தில் ஆரம்பித்தல்
(1) சம எடுப்பு (2) விஷம எடுப்பு (3) அதீத எடுப்பு (4) அநாகத எடுப்பு

24. நாட்டிய நாடகங்களைத் தெலுங்கில் இயற்றியவர்
(1) மெலட்டூர் வெங்கடராம சாஸ்திரி (2) கவிக்குஞ்சரபாரதி
(3) தியாகராஜர் (4) கிரிராஜகவி

**25.** மகுட அடவு எனவும் தீர்மான அடவு எனவும் அழைக்கப்படும் அடவு யாது?
(1) தத்தெய்தாஹா
(2) தாஹத்தஜெம்தரிதா
(3) கிடதகதரிகிடதொம்
(4) தாங்கிடுதத்தத்தின்ன

**26.** சதங்கை அணிந்து ஆடற்பயிற்சி அளிக்கப்படும் விழா
(1) கிழமைக்கூத்து
(2) சட்டம் கொடுத்தல்
(3) ஊருக்குச் சொல்லல்
(4) தினக்கூத்து

**27.** ;; திதி; தெய்; தாம்;, இதிலுள்ள மொத்த மாத்திரைகளின் எண்ணிக்கை யாது?
(1) 11 (2) 12 (3) 16 (4) 17

**28.** இரண்டு கைகளிலும் ஹம்ஸாசியம் அபிநயித்துப் பின்னர் வலது கையில் மாத்திரம் சிகரம் காண்பிக்கும் உறவுமுறை குறிப்பது
(1) கணவனை (2) தந்தையை (3) தம்பதியை (4) மாமனாரை

**29.** உண்மையிலேயே அரங்கிலே கண்ணீர் சிந்தி நடிப்பது
(1) சபாநாயகன்
(2) லோகதர்மி
(3) பாத்திர இலட்சணம்
(4) நாட்டியதர்மி

**30.** மொத்த அட்சர எண்ணிக்கையாக 11 இனை எடுத்துக் கொள்ளும் தாளம்
(1) மிஸ்ரஜாதி ரூபகதாளம்
(2) கண்டஜாதி மட்டியதாளம்
(3) மிஸ்ரஜாதி திரிபுடைதாளம்
(4) சதுஸ்ரஜாதி ரூபகதாளம்

**31.** துணங்கை நடனம் ஆடப்பட்ட காலப்பகுதி யாது?
(1) சங்க காலம்
(2) சங்கமருவிய காலம்
(3) பல்லவர் காலம்
(4) சோழர் காலம்

**32.** துரக வண்ணம் குறிப்பது
(1) யானையின் அசைவு
(2) குரங்கின் சேட்டைகள்
(3) கண்டகக் குதிரை பற்றியது
(4) சிங்கத்தின் அசைவு

**33.** மன்னார் மாவட்டத்தில் பிரசித்தி பெற்ற கூத்து
(1) வடமோடிக் கூத்து
(2) தென்மோடிக் கூத்து
(3) கோவலன் கூத்து
(4) வாசாப்புக் கூத்து

**34.** கதகளி நடனத்தில் சிவப்புநிறத் தாடியைப் பயன்படுத்துபவர்கள் யாவர்?
(1) தேவர், கிருஷ்ணன்
(2) ஹனுமான், சுக்கிரீவன்
(3) துரியோதனன், துச்சாதனன்
(4) இந்திரன், இராவணன்

**35.** நவரசம் தொடர்பான பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.
A - பயானக ரஸத்தினை எதிர் ரஸமாகவும் உற்சாகத்தினை ஸ்தாயி பாவமாகவும் கொண்டது.
B - சிருங்கார ரஸத்தினை எதிர் ரஸமாகவும் வெறுப்பினை ஸ்தாயி பாவமாகவும் கொண்டது.
C - மகேந்திரனைக் கடவுளாகவும் மஞ்சள் கலந்த வெள்ளையை நிறமாகவும் கொண்டது.
D - மகாவிஷ்ணுவைக் கடவுளாகவும் பச்சையை நிறமாகவும் கொண்டது.
இவற்றுள் ஹாஸ்ய ரஸத்திற்குப் பொருத்தமான கூற்றுக்கள்
(1) A, C ஆகியன மாத்திரம்
(2) A, D ஆகியன மாத்திரம்
(3) B, C ஆகியன மாத்திரம்
(4) B, D ஆகியன மாத்திரம்

● **36** தொடக்கம் **40** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் தரப்பட்டுள்ள படத்தினை அடிப்படையாகக் கொண்டு பொருத்தமான விடையினைத் தெரிவுசெய்க.

**36.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள வாத்தியம்



(1) நாதஸ்வரம்
(2) புல்லாங்குழல்
(3) கிளார்னெட்
(4) ஒத்து



**37.** இப்படத்தில் உள்ள பெரியார் இயற்றிய பாடல்
(1) "சின்னக் கண்ணன் என்ன செய்தான் தெரியுமா..."
(2) "கண்ணன் எங்கள் கண்ணனாம்..."
(3) "கண்ணன் புரிந்த லீலை சொல்லுவேன் கேள்..."
(4) "காக்கைச் சிறகினிலே நந்தலாலா..."

**38.** இங்கு காட்டப்பட்டுள்ள சம்யுத ஹஸ்தம் யாது?



(1) டோலம்
(2) ஸ்வஸ்திகம்
(3) புஸ்படகம்
(4) கடகாவர்த்தனம்

**39.** இங்கு பிரதிபலித்துக் காட்டப்படும் ரஸம் யாது?



(1) வீரம்
(2) கோபம்
(3) சிருங்காரம்
(4) ஹாசியம்

**40.** இப்படத்தில் காணப்படும் திருஷ்டி பேதம் யாது?



(1) சாசி
(2) பிரலோகிதம்
(3) உல்லோகிதம்
(4) அனுவிருத்தம்

❋❋

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

රහස්‍යයි
அந்தரங்கமானது

# අ.පො.ස. (සා.පෙළ) විභාගය - 2022 (2023)
# க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2022 (2023)

විෂය අංකය / பாட இலக்கம்: **45** — විෂයය / பாடம்: **பரதநாட்டியம்**

## I පත්‍රය - පිළිතුරු
## I பத்திரம் - விடைகள்

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරෙහි අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 3 | 11. | 4 | 21. | 2 | 31. | 1 |
| 02. | 4 | 12. | 2 | 22. | 3 | 32. | 3 |
| 03. | 2 | 13. | 3 | 23. | 1 | 33. | 4 |
| 04. | 2 | 14. | 1 | 24. | 1 | 34. | 3 |
| 05. | 3 | 15. | 3 | 25. | 3 | 35. | All |
| 06. | 2 | 16. | 4 | 26. | 4 | 36. | 1 |
| 07. | 1 | 17. | 2 | 27. | 3 | 37. | 4 |
| 08. | 4 | 18. | 1 | 28. | 1 | 38. | 2 |
| 09. | 1 | 19. | 3 | 29. | 2 | 39. | 4 |
| 10. | 2 | 20. | 4 | 30. | 3 | 40. | 1 |

විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் } එක් පිළිතුරකට ලකුණු / ஒரு சரியான விடைக்கு **01** බැගින் / புள்ளி வீதம்

මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் **01 × 40 = 40**

---

පහත නිදසුනෙහි දක්වෙන පරිදි බහුවරණ උත්තරපත්‍රයේ අවසාන තීරුවේ ලකුණු ඇතුළත් කරන්න.
கீழ் குறிப்பிடப்பட்டிருக்கும் உதாரணத்திற்கு அமைய பல்தேர்வு வினாக்களுக்குரிய புள்ளிகளை பல்தேர்வு வினாப்பத்திரத்தின் இறுதியில் பதிக.

නිවැරදි පිළිතුරු සංඛ්‍යාව / சரியான விடைகளின் தொகை: 25 / 40

I පත්‍රයේ මුළු ලකුණු / பத்திரம் I இன் மொத்தப்புள்ளி: 25 / 40

## வினாத்தாளின் குறிக்கோள் பற்றிய அறிமுகம்

### முதலாம் பகுதி வினாவுக்கான குறிக்கோள்கள்

1. நாட்டியத்தினைப் பூலோகத்திற்கு கொண்டு வந்தவர் பற்றி அறிந்து கொள்வர்.
2. பாவம், ராகம், தாளம் என்பன பற்றி அறிந்து கொள்வர்.
3. இடி, மின்னல் தொடர்பான அஸம்யுத ஹஸ்தங்களின் பிரயோகம் பற்றி தெரிந்து கொள்வர்.
4. சபா இலட்சணத்தில் கற்றோருக்கு தும்பி ஒப்பிடப்படுவதை தெரிந்து கொள்வர்.
5. பெருவிரலுடன் சுட்டுவிரலை இணைத்து ஏனைய விரல்களை நிமிர்த்து பிடித்தால் வரும் ஹஸ்தத்தை தெரிந்து கொள்வர்.
6. அஞ்சலித்தட்டு, உள்ளங்கைத்தட்டு என பலவகை தட்டுக்களை பிரயோகித்து ஆடும் கிராமிய நடனத்தை பற்றி அறிந்து கொள்வர்.
7. பரதநாட்டிய அடவுகளில் உத்பிளவன பாத பேதத்தினை எடுத்துக் கொள்ளும் அடவினை அறிந்து கொள்வர்.
8. "வஸ்வாச்சாத" என்பதன் தமிழ் கருத்தை தெரிந்து கொள்வர்.
9. நாட்டிய கச்சேரி அமைப்பு முறையில் முதன்முதலில் அபிநயப் பகுதியினை வெளிப்படுத்தும் உருப்படியினை அறிந்து கொள்வர்.
10. நீரில் மூழ்குதல், வெட்கம் என்பவற்றினைப் பிரயோகிக்கப் பயன்படுத்தப்படும் சிரோபேதம் பற்றி தெரிந்து கொள்வர்.
11. அவுணர் போரில் தோற்று ஓட முருகன் ஆடிய கூத்து பற்றி அறிந்து கொள்வர்.
12. இரணியனின் அகங்காரத்தை அழிக்க பாதி மிருகமாகவும் பாதி மனிதனாகவும் திருமால் எடுத்த அவதாரம் பற்றி அறிந்து கொள்வர்.
13. வீணை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள் பற்றி தெரிந்து கொள்வர்.
14. " தெய்ஹத் தெய்ஹி " அடவின் மறுபெயர் பற்றி அறிந்து கொள்வர்.
15. நாட்டியப் பெண்ணுக்குத் துணையாக இருக்க வேண்டிய பகிப் பிராணன்களில் ஒன்று பற்றி தெரிந்து கொள்வர்.
16. உள்ளத்தில் தோன்றும் உணர்ச்சிகளை முகத்திலும், உடல் உறுப்புகளினாலும் வெளிப்படுத்தப்படும் அபிநயம் பற்றி அறிந்து கொள்வர்.
17. உடுக்கு வாத்தியத்திற்கு பயன்படுத்தப்படுவது பற்றி தெரிந்து கொள்வர்.
18. தேவஹஸ்தத்தில் வர்ணனைக் காண்பிப்பதற்கு பயன்படும் ஹஸ்தத்தினை மாற்றி அபிநயிக்கும்போது உருவாகும் ஜாதி ஹஸ்தம் பற்றி அறிந்து கொள்வர்.
19. மிருதங்கத்திற்கு "கணீர்" என்ற ஓசை எழுப்புவதற்கு தண்ணீரும், ரவையும் கலந்து பூசப்படும் கலவை பற்றி அறிந்து கொள்வர்.
20. இறைவன் கௌரி தாண்டவம் ஆடிய சபை பற்றி தெரிந்து கொள்வர்.
21. எட்டுக் கண்டிகைகளைக் கொண்டு ஆக்கப்பட்ட உருப்படி பற்றி அறிந்து கொள்வர்.
22. ஆசை நிறைவேறாது விட்டால் மரணத்தை அல்லது மரண மூச்சினை உண்டாக்கும் பாணம் பற்றி தெரிந்து கொள்வர்.

23. பாட்டும், ஜதியும் தாளத்துடன் ஒரே நேரத்தில் ஆரம்பித்தல் பற்றி அறிந்து கொள்வர்.
24. நாட்டிய நாடகங்களைத் தெலுங்கில் இயற்றியவர் பற்றி அறிந்து கொள்வர்.
25. மகுட அடவு எனவும் தீர்மான அடவு எனவும் அழைக்கப்படும் அடவு பற்றி தெரிந்து கொள்வர்.
26. சதங்கை அணிந்து ஆடற்பயிற்சி அளிக்கப்படும் விழா பற்றி தெரிந்து கொள்வர்.
27. ;; திதி ; தெய் ; தாம் ;, இன் மொத்த மாத்திரைகளை தெரிந்து கொள்வர்.
28. இரண்டு கைகளிலும் ஹம்ஸாசியம் அபிநயித்து பின்னர் வலது கையில் மாத்திரம் சிகரம் காண்பிக்கும் உறவுமுறை பற்றி அறிந்து கொள்வர்.
29. உண்மையிலேயே அரங்கிலே கண்ணீர் சிந்தி நடிப்பது சாத்வீக அபிநயத்தில் உள்ளடக்குவது என்பது பற்றி தெரிந்து கொள்வர்.
30. மொத்த அட்சர எண்ணிக்கையாக 11 இனை கொண்ட தாளத்தை பற்றி அறிந்து கொள்வர்.
31. துணங்கை நடனம் ஆடப்பட்ட காலப்பகுதி பற்றி அறிந்து கொள்வர்.
32. துரக வண்ணம் குறிப்பது பற்றி தெரிந்து கொள்வர்.
33. மன்னார் மாவட்டத்தில் பிரசித்தி பெற்ற கூத்து பற்றி தெரிந்து கொள்வர்.
34. கதகளி நடனத்தில் சிவப்புநிறத் தாடியை பயன்படுத்தும் பாத்திரங்கள் பற்றி அறிந்து கொள்வர்.
35. ஹாஸ்ய ரசம் தொடர்பான கூற்றுக்களை தெரிந்து கொள்வர்.
36. படத்தில் காட்டப்பட்டுள்ள வாத்தியத்தினை தெரிந்து கொள்வர்.
37. படத்தில் காட்டப்பட்டுள்ள பெரியாரினை தெரிந்து கொள்வர்.
38. படத்தில் காட்டப்பட்டுள்ள ஹஸ்தத்தினை தெரிந்து கொள்வர்.
39. படத்தில் காட்டப்பட்டுள்ள ரசத்தினை தெரிந்து கொள்வர்.
40. படத்தில் காட்டப்பட்டுள்ள திருஷ்டி பேதத்தினை தெரிந்து கொள்வர்.

## பகுதி II

### முதலாம் வினாவுக்கான குறிக்கோள்கள்

(i) 1 ஆவது தத்தெய்தாஹா அடவு அமைந்துள்ள தாளத்தினை அறிந்து கொள்வர்.

(ii) சதுஸ்ரஜாதி அடதாளத்தின் அங்க அடையாளத்தை அறிந்து கொள்வர்.

(iii) பல அடவுகளின் சேர்க்கை எவ்வாறு என்பதை அறிந்து கொள்வர்.

(iv) பாரம் குறைந்த உடைகளை அணிந்து ஆடப்படும் கூத்து பற்றி அறிந்து கொள்வர்.

(v) ஸ்வரங்களையே தாதுவாகவும் மாதுவாகவும் கொண்டமைக்கப்பட்ட உருப்படி பற்றி அறிந்து கொள்வர்.

(vi) மகாமேரு, தட்சிணமேரு எனக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் ஆலயம் பற்றி அறிந்து கொள்வர்.

(vii) பரதநாட்டிய "குலகுரு" எனச் சிறப்பித்துக் கூறப்படுபவர் யார் என்பதை தெரிந்து கொள்வர்.

(viii) வயலின் வாத்தியத்தின் மறுபெயர் பற்றி அறிந்து கொள்வர்.

(ix) விபாவத்தின் இரு வகைகள் பற்றி அறிந்து கொள்வர்.

(x) சங்கமருவிய காலத்தில் சிறந்து விளங்கிய நாட்டியமங்கை பற்றி அறிந்து கொள்வர். அவருக்கு வழங்கப்பட்ட பட்டம் பற்றி தெரிந்து கொள்வர்.

### இரண்டாம் வினாவுக்கான குறிக்கோள்கள்

(i) சம்பிரதாய நாட்டியக் கச்சேரி அமைப்பு முறையில் முதன்முதலில் இடம்பெறும் நிருத்த உருப்படியினை அறிந்து கொள்வர். அதன் இராக, தாளத்தினை தெரிந்து கொள்வர்.

(ii) மேலே குறிப்பிட்ட உருப்படியின் சிரோ, திருஷ்டி, கண்ட, பாத பேதங்களை அறிந்து கொள்வர்

(iii) மேலே குறிப்பிட்ட உருப்படியின் தீர்மானப் பகுதியை இறுதிவரை தாள, அங்கக் குறியீட்டுடன் எழுதும் முறையை தெரிந்து கொள்வர்.

### மூன்றாம் வினாவுக்கான குறிக்கோள்கள்

(i) "தெய்வீக ஆடற்கலை" என்னும் நூலை எழுதியவர் பற்றி அறிந்து கொள்வர்.

(ii) மேலே குறிப்பிட்ட கலைஞர் பரதநாட்டியத்துறைக்கு ஆற்றிய பங்களிப்பிற்காக அவருக்கு வழங்கிக் கௌரவிக்கப்பட்ட விருதுகளை தெரிந்து கொள்வர்.

(iii) மேலே குறிப்பிட்ட கலைஞர் கலைத்துறைக்கு ஆற்றிய பணிகளை அறிந்து கொள்வர்.

**நான்காம் வினாவுக்கான குறிக்கோள்கள்**

(i) திரிசூல ஹஸ்தத்தின் ஸ்லோகத்தினையும் கருத்தினையும் தெரிந்து கொள்வர்.
(ii) நாகபந்த ஹஸ்தத்தின் ஸ்லோகத்தினையும் கருத்தினையும் தெரிந்து கொள்வர்.
(iii) வராக ஹஸ்தத்தின் ஸ்லோகத்தினையும் கருத்தினையும் தெரிந்து கொள்வர்.
(iv) பாஷ ஹஸ்தத்தின் ஸ்லோகத்தினையும் கருத்தினையும் தெரிந்து கொள்வர்.

**ஐந்தாம் வினாவுக்கான குறிக்கோள்கள்**

(i) பரதநாட்டியக் கச்சேரியில் நட்டுவனார் பயன்படுத்தும் கஞ்சக்கருவி பற்றி அறிந்து கொள்வர்.
(ii) மேலே குறிப்பிட்ட இசைக்கருவியினை வரைந்து, அதன் பாகங்களைக் குறித்துக் காட்டத் தெரிந்து கொள்வர்.
(iii) நாட்டியக் கச்சேரியில் மேலே குறிப்பிட்ட இசைக்கருவியின் பங்களிப்பு பற்றி அறிந்து கொள்வர்.

**ஆறாம் வினாவுக்கான குறிக்கோள்கள்**

(i) இந்திய சாஸ்திரிய நடனங்கள் பற்றி அறிந்து கொள்வர்.
(ii) தென்னிந்தியாவில் பிரசித்திபெற்ற சாஸ்திரிய நடனங்களையும் அவற்றின் மாநிலங்களையும் பற்றி அறிந்து கொள்வர்.
(iii) பரதமுனிவரால் தோற்றுவிக்கப்பட்ட நடனத்தின் தோற்றம், வளர்ச்சி. பங்களிப்புச் செய்த கலைஞர்கள் பற்றி அறிந்து கொள்வர்.

**ஏழாம் வினாவுக்கான குறிக்கோள்கள்**

(i) அடவு பற்றிய எண்ணக்கருக்களுக்கு சிறுகுறிப்பாக எழுத தெரிந்து கொள்வர்.
(ii) கௌத்துவம் பற்றிய எண்ணக்கருக்களுக்கு சிறுகுறிப்பாக எழுத தெரிந்து கொள்வர்.
(iii) ஏந்தல் நடனம் பற்றிய எண்ணக்கருக்களுக்கு சிறுகுறிப்பாக எழுத தெரிந்து கொள்வர்.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**45 T I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2022(2023)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2022(2023)
**General Certificate of Education (Ord. Level) Examination, 2022(2023)**

| | |
|---|---|
| භරත නැටුම් | I, II |
| பரதநாட்டியம் | I, II |
| Bharatha Dancing | I, II |

## பரதநாட்டியம் II

* முதலாம் வினாவையும் வேறு நான்கு வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) 1 ஆவது தத்தெய்தாஹா அடவு அமைந்துள்ள தாளம் யாது?

(ii) சதுஸ்ரஜாதி அடதாளத்தினை அங்க அடையாளத்துடன் எழுதுக.

(iii) பல அடவுகளின் சேர்க்கையை எவ்வாறு அழைப்பர்?

(iv) பாரம் குறைந்த உடைகளை அணிந்து ஆடப்படும் கூத்து யாது?

(v) ஸ்வரங்களையே தாதுவாகவும் மாதுவாகவும் கொண்டமைக்கப்பட்ட உருப்படி யாது?

(vi) மகாமேரு, தட்சிணமேரு எனக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் ஆலயம் யாது?

(vii) பரதநாட்டிய 'குலகுரு' எனச் சிறப்பித்துக் கூறப்படுபவர் யார்?

(viii) வயலின் வாத்தியத்தின் மறு பெயர் யாது?

(ix) விம்பத்தின் இரு வகைகளையும் குறிப்பிடுக.

(x) சங்கமருவிய காலத்தில் சிறந்து விளங்கிய நாட்டிய மங்கை யார்? அவருக்கு வழங்கப்பட்ட பட்டம் யாது?

**2.** (i) சம்பிரதாய நாட்டியக் கச்சேரி அமைப்பு முறையில் முதன்முதலில் இடம்பெறும் நிருத்த உருப்படி யாது? அதன் இராகம், தாளத்தினை எழுதுக.

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட உருப்படியில் அடங்கும் சிரஸ், திருஷ்டி, கண்ட, பாத பேதங்களை அட்டவணைப்படுத்திக் காட்டுக.

(iii) மேலே (i) இல் குறிப்பிட்ட உருப்படியின் தீர்மானப் பகுதியிலிருந்து இறுதிவரை தாள, அங்கக் குறியீட்டுடன் எழுதுக.

**3.** (i) "தெய்வீக ஆடற்கலை" என்னும் நூலினை எழுதியவர் யார்?

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட கலைஞர் பரதநாட்டியத் துறைக்கு ஆற்றிய பங்களிப்பிற்காக அவருக்கு வழங்கிக் கௌரவிக்கப்பட்ட நான்கு விருதுகளைக் குறிப்பிடுக.

(iii) மேலே (i) இல் குறிப்பிட்ட கலைஞர் கலைத்துறைக்கு ஆற்றிய பணிகளை விளக்குக.

**4.** பின்வரும் ஹஸ்தங்களுக்குரிய விநியோகங்களை ஸ்லோகத்துடனும் அதன் கருத்துடனும் எழுதுக.

(i) திரிசூல ஹஸ்தம்

(ii) நாகபந்த ஹஸ்தம்

(iii) வராக ஹஸ்தம்

(iv) பாஷ ஹஸ்தம்

5. (i) பரத நாட்டியக் கச்சேரியில் நட்டுவனார் பயன்படுத்தும் கஞ்சக்கருவி யாது?
   (ii) மேலே (i) இல் குறிப்பிட்ட இசைக்கருவியினை வரைந்து, அதன் பாகங்களைக் குறித்துக் காட்டுக.
   (iii) நாட்டியக் கச்சேரியில் மேலே (i) இல் குறிப்பிட்ட இசைக்கருவியின் பங்களிப்பு பற்றி விளக்கி எழுதுக.

6. (i) நீர் விரும்பிய இந்திய சாஸ்திரிய நடனங்கள் நான்கினைக் குறிப்பிடுக.
   (ii) தென்னிந்தியாவில் பிரசித்திபெற்ற சாஸ்திரிய நடனங்கள் நான்கினையும் அவற்றின் மாநிலங்களையும் அட்டவணைப்படுத்திக் காட்டுக.
   (iii) பரதமுனிவரால் தோற்றுவிக்கப்பட்ட நடனத்தின் தோற்றம், வளர்ச்சி, பங்களிப்புச் செய்த கலைஞர்களைக் குறிப்பிட்டு விளக்குக.

7. பின்வருவனவற்றிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.
   (i) அடவு
   (ii) கௌத்துவம்
   (iii) ஏந்தல் நடனம்

※※※

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) 1 ஆவது தத்தெய்தாஹா அடவு அமைந்துள்ள தாளம் யாது?

(ii) சதுஸ்ரஜாதி அடதாளத்தினை அங்க அடையாளத்துடன் எழுதுக.

(iii) பல அடவுகளின் சேர்க்கையை எவ்வாறு அழைப்பர்?

(iv) பாரம் குறைந்த உடைகளை அணிந்து ஆடப்படும் கூத்து யாது?

(v) ஸ்வரங்களையே தாதுவாகவும் மாதுவாகவும் கொண்டமைக்கப்பட்ட உருப்படி யாது?

(vi) மகாமேரு, தட்சிணமேரு எனக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படும் ஆலயம் யாது?

(vii) பரதநாட்டிய 'குலகுரு' எனச் சிறப்பித்துக் கூறப்படுபவர் யார்?

(viii) வயலின் வாத்தியத்தின் மறு பெயர் யாது?

(ix) விபாவத்தின் இரு வகைகளையும் குறிப்பிடுக.

(x) சங்கமருவிய காலத்தில் சிறந்து விளங்கிய நாட்டிய மங்கை யார்? அவருக்கு வழங்கப்பட்ட பட்டம் யாது?

i. ரூபகம் (01 புள்ளி)

ii. $I_4$ $I_4$ O O (01 புள்ளி)

iii. கோர்வை (01 புள்ளி)

iv. தென்மோடி (01 புள்ளி)

v. ஜதீஸ்வரம் (01 புள்ளி)

vi. தஞ்சை பெருங்கோயில் / பிரகதீஸ்வரர் ஆலயம் (01 புள்ளி)

vii. பந்தணை நல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை (01 புள்ளி)

viii. பிடில் (01 புள்ளி)

ix. ஆலம்பன விபாவம், உத்தீபன விபாவம் (02 புள்ளி)

x. மாதவி
தலைக்கோலி பட்டம் (02 புள்ளி)

**(மொத்தம் 12 புள்ளிகள்)**

2. (i) சம்பிரதாய நாட்டியக் கச்சேரி அமைப்பு முறையில் முதன்முதலில் இடம்பெறும் நிருத்த உருப்படி யாது? அதன் இராகம், தாளத்தினை எழுதுக.

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட உருப்படியில் வரும் சிரோ, திருஷ்டி, கண்ட, பாத பேதங்களை அட்டவணைப்படுத்திக் காட்டுக.

(iii) மேலே (i) இல் குறிப்பிட்ட உருப்படியின் தீர்மானப் பகுதியிலிருந்து இறுதிவரை தாள, அங்கக் குறியீட்டுடன் எழுதுக.

i.

- நிருத்த உருப்படி - அலாரிப்பு (01 புள்ளி)
- இராகம் - நாட்டை (1/2 புள்ளி)
- தாளம் - திஸ்ர ஏகம் (1/2 புள்ளி)

(02 புள்ளிகள்)

ii.

| சிரோபேதம் | திருஷ்டி பேதம் | கண்ட பேதம் | பாத பேதம் |
|---|---|---|---|
| சமம்<br>உத்வாகிதம் | சமம்<br>உல்லோகிதம்<br>ப்ரலோகிதம் | சுந்தரி | சமபாதம்<br>பிரோங்கணம்<br>ஸ்வஸ்திகம்<br>முழுமண்டி<br>அரைமண்டி |

(4 x 1 = 04 புள்ளிகள்)

iii.

| | | | |
|---|---|---|---|
| தாஹத | ஜெம், தரி | தா ; | // |
| ஜெம், தரி | ஜெக தரி | தெய் , ; | // |
| ததிங்கிண | தொம், தக | ததிங்கிண | // |
| தொம், தக | திகுததிங் | கிணதொம் , | // |
| தாம் ; | ; ; | ; ; | // |
| திருகுடு தக | திருகுடு தக | திருகுடு தக | // |
| திருகுடு தக | திருகுடு தக | திருகுடு தக | // |
| திருகுடு தக | திருகுடு தக | திருகுடு தக | // |
| தளாங்கு | தக ததிங் | கிணதொம் , | // |
| தா ; | தெய் , ; | தெய் , யும் | // |
| தத் , ; | தாம் ; | கிடதக | // |
| தாம் ; | ; ; | ; ; | // |

(06 புள்ளிகள்)

3. (i) “தெய்வீக ஆடற்கலை” என்னும் நூலினை எழுதியவர் யார்?

(ii) மேலே (i) இல் குறிப்பிட்ட கலைஞர் பரதநாட்டியத் துறைக்கு ஆற்றிய பங்களிப்பிற்காக அவருக்கு வழங்கிக் கௌரவிக்கப்பட்ட நான்கு விருதுகளைக் குறிப்பிடுக.

(iii) மேலே (i) இல் குறிப்பிட்ட கலைஞர் கலைத்துறைக்கு ஆற்றிய பணிகளை விளக்குக.

(i) வழுவூர் இராமையாப்பிள்ளை **(02 புள்ளிகள்)**

(ii)

- ❖ நாட்டிய கலாகேசரி
- ❖ இசைப் பேரறிஞர்
- ❖ கலைமாமணி
- ❖ நாட்டியச்செல்வம்
- ❖ பத்மஸ்ரீ

**(04 புள்ளிகள்)**

(iii)

- ❖ 1938ம் ஆண்டில் மயிலாப்பூரில் குடியேறி அங்கு “வழுவூர் நுண்கலை மன்றம்” எனும் ஸ்தாபனத்தை நிறுவி நூற்றுக்கணக்கான மாணவர்களுக்கு நடனம் பயிற்றுவித்தார்.
- ❖ அக்காலத்தில் வழக்கொழிந்திருந்த நாட்டிய சாஸ்திரத்தில் காணப்படும் 108 கரணங்களையும் ஆராய்ச்சி செய்து அவற்றை மீண்டும் பரதநாட்டியத்தில் புகுத்திய பெருமை இவரையே சாரும்.
- ❖ கனபஞ்ச இராகங்களிலமைந்த தியாகராஜ சுவாமியின் பஞ்சரத்தின கீர்த்தனைகளுக்கு முதன்முதலில் நடனம் அமைத்தவரும் இவரே.
- ❖ முத்துத்தாண்டவர், கோபாலகிருஷ்ண பாரதியார், பாபநாசம சிவன், அருணாசலக்கவிராயர் ஆகியோரது பாடல்களை அதிகமாக பரதநாட்டியத்தில் கையாண்டார்.
- ❖ பழனி முருகன், திருப்பதி வெங்கடேஸ்வரர், தஞ்சை பிருகதீஸ்வரர் ஆகிய தெய்வங்களின் பெயரில் தமிழ், தெலுங்கு ஆகிய மொழிகளில் பல கீர்த்தனைகளையும், வர்ணங்களையும் பாடி அவற்றுக்கு தாமே நடன அமைப்புகளையும் செய்து மேடையேற்றியும் உள்ளார்.
- ❖ இவர் சொந்தமாகச் சாகித்தியங்களையும் அமைத்துப் பல ஜதீஸ்வரங்களையும், தில்லானாக்களையும், தமிழ் சப்தங்களையும் அமைத்துள்ளார்.
- ❖ தெய்வீக ஆடற்கலை எனும் நாட்டிய நூலையும் எழுதி வெளியிட்டுள்ளார்.
- ❖ வழுவூர் நாட்டியப் பாணி என்பது இவரது குடும்பச் சொத்தாகும்.
- ❖ வழுவூர் இராமையாபிள்ளையிடம் பரதநாட்டியம் பயின்ற மாணவர்களில் ஆண், பெண், ஆகிய இருபாலரும் அடங்குவர்.
- ❖ இவர்கள் தலைசிறந்த நடன ஆசிரியர்களாகவும் நட்டுவனார்களாகவும் நாட்டிய நெறியாளர்களாகவும், தயாரிப்பாளர்களாகவும், ஆய்வாளர்களாகவும், விமர்சகர்களாகவும் அவைக்காற்று கலைஞர்களாகவும் விளங்குகின்றனர்.
- ❖ இலங்கை, இந்திய கலைஞர்கள் இவரிடம் நாட்டியம் பயின்று அவைக்காற்று கலைஞர்களாகவும், ஆசிரியர்களாகவும் பிரபல்யம் அடைந்துள்ளனர்

**(06 புள்ளிகள்)**

4. பின்வரும் ஹஸ்தங்களுக்குரிய விநியோகங்களை ஸ்லோகத்துடனும் அதன் கருத்துடனும் எழுதுக.
   (i) திரிசூல ஹஸ்தம்
   (ii) நாகபந்த ஹஸ்தம்
   (iii) வராக ஹஸ்தம்
   (iv) பாஷ ஹஸ்தம்

**(i) திரிசூல ஹஸ்த விநியோகம்**

சுலோகம் :-

வில்வ பத்ரே த்ரிக்த்வ யுக்தே திரிசூலகர ஈரிதஹ /

கருத்து :-

| | |
|---|---|
| வில்வ பத்ரே | - வில்வமரத்தின் இலைகள் |
| த்ரிக்த்வ யுக்தே | - மூன்று எனக் காட்டுதல் |
| திரிசூலகர | - திரிசூலத்தைக் காட்டுதல் |

**(03 புள்ளிகள்)**

(ii) நாகபந்த ஹஸ்த விநியோகம்

சுலோகம் :-

ஏதஸ்ய விநியோகஸ்யாத் நாகபந்தேஹி சம்மதஹ /

கருத்து :-

| | |
|---|---|
| நாகபந்தம் | - பாம்பின் கட்டு |

**(03 புள்ளிகள்)**

**(iii) வராஹ ஹஸ்த விநியோகம்**

சுலோகம் :-

ஏதஸ்ய விநியோகஸ்யாத் வராஹார்த்த ப்ரதர்ஷனே /

கருத்து :-

| | |
|---|---|
| வராஹம் | - பன்றி |

**(03 புள்ளிகள்)**

(iv) **பாஷ ஹஸ்த விநியோகம்**

சுலோகம் :-

அன்யோன்ய கலஹே பாஷே ஷ்ருங்கலாயாம் நியுஜ்யதே /

கருத்து :-

| | |
|---|---|
| அன்யோன்ய கலஹே | - ஒருவரோடு ஒருவர் சண்டை பிடித்தல் |
| பாஷே | - கயிறு |
| ஷ்ருங்கலாயாம் | - சங்கிலி |

**(03 புள்ளிகள்)**

**(மொத்தம் 12 புள்ளிகள்)**

5. (i) பரத நாட்டியக் கச்சேரியில் நட்டுவனார் பயன்படுத்தும் கஞ்சக்கருவி யாது?
   (ii) மேலே (i) இல் குறிப்பிட்ட இசைக்கருவியினை வரைந்து, அதன் பாகங்களைக் குறித்துக் காட்டுக.
   (iii) நாட்டியக் கச்சேரியில் மேலே (i) இல் குறிப்பிட்ட இசைக்கருவியின் பங்களிப்பு பற்றி விளக்கி எழுதுக.

(i) தாளம்/ நட்டுவாங்கத் தாளம்/ நாட்டியத் தாளம் (02 புள்ளிகள்)

(ii)




**(04 புள்ளிகள்)**

(iii)

- நடனத்திற்குப் போடப்படும் தாளம் கனதியான வெண்கலத்தால் சிறிய குவியலான வட்டமாகச் செய்யப்பட்டு சுருதி அளவு கூடப் பிரதிபலிக்க உருவாக்கப்பட்டிருக்கும்.
- நாட்டியத்திற்கு தாளமே ஆதாரமாக உள்ளது.
- நாட்டியக் கச்சேரியின் சிறப்பு நட்டுவாங்கத்திலே தங்கியுள்ளது.
- நாட்டியத்திற்குப் பயன்படுத்தப்படும் தாளமானது ஒன்று சிறியதாகவும் மற்றொன்று பெரியதாகவும் காணப்படும். அவை செய்யப்பட்டிருக்கும் உலோகச் சேர்வைகளில் மாறுபாடு காணப்படும்.
- இடது கையில் உள்ள தாளத்தை ஸ்திரமாகப் பிடித்திருக்க வலது கையில் காணப்படும் தாளத்தால் நாட்டிய அடவுச் சொற்கட்டுக்களுக்கேற்ப மாறிமாறிப் போடுதல் வேண்டும்.
- நாட்டியத்தில் இந்தத் தாளமானது உயிர்நாடியாக விளங்குகிறது.
- நடனத்தின் ஜதி , சொற்கட்டு, ஸ்வரம், சாகித்தியம் என்பவற்றிற்கு ஏற்ப வல்லினம், மெல்லினமாக பயன்படுத்த வேண்டும்.

**(06 புள்ளிகள்)**

6. (i) நீர் விரும்பிய இந்திய சாஸ்திரிய நடனங்கள் நான்கினைக் குறிப்பிடுக.
   (ii) தென்னிந்தியாவில் பிரசித்திபெற்ற சாஸ்திரிய நடனங்கள் நான்கினையும் அவற்றின் மாநிலங்களையும் அட்டவணைப்படுத்திக் காட்டுக.
   (iii) பரதமுனிவரால் தோற்றுவிக்கப்பட்ட நடனத்தின் தோற்றம், வளர்ச்சி, பங்களிப்புச் செய்த கலைஞர்களைக் குறிப்பிட்டு விளக்குக.

(i) பரதநாட்டியம், கதகளி, குச்சுப்புடி, மணிப்புரி, ஒடிசி, மோகினியாட்டம், கதக்

**(02 புள்ளிகள்)**

(ii)

- பரதநாட்டியம் - தென்னிந்தியா / தஞ்சாவூர்
- கதகளி - கேரளா
- குச்சுப்புடி - ஆந்திரா
- மோகினியாட்டம் - கேரளா

**(04 புள்ளிகள்)**

(iii)

- பரதநாட்டியம் தோன்றிய மாநிலம் தென்னிந்தியா ஆகும்.
- தமிழ்நாட்டின் நாகரிகக் கருவூலச் சின்னமாய் அருங்கலைகளின் தத்துவ வடிவமாக எழுச்சியுற்று தொன்று தொட்டு இன்றுவரை சிறப்புற்று விளங்குவது பரதக்கலை.
- பரதநாட்டியம் வைதீக மதங்களான சைவத்தையும், வைணவத்தையும் அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சியுற்றது.
- பண்டைய காலத்தில் கூத்து, சதிர் என அழைக்கப்பட்டது.
- குருகுலப் பரம்பரையினால் பேணி போற்றிப் பாதுகாக்கப்பட்டது.
- சின்னமேளமென்று சாதாரண பாமர மக்களால் அழைக்கப்பட்டு தற்காலத்தில் பரதநாட்டியம் என்று பெயர் பெற்றது.

- ❖ விஜயநகர, மராட்டிய மன்னர்களின் ஆட்சியின் போது ஆட்சிமொழியாக தெலுங்கு இருந்தமையால் அம்மொழியில் அமைந்த கர்நாடக சங்கீதப் பாடல்கள் பரதநாட்டியத்திற்கு உயிர்நாடியாக விளங்கின.
- ❖ பின்னர் எழுந்த தமிழ் எழுச்சி இயக்கங்களினால் பரதநாட்டியம், தமிழ் சாகித்திய கர்த்தாக்களின் தமிழ் சாகித்தியங்களை உள்வாங்கி ஒரு உயர்கலையாக திகழ்கிறது.
- ❖ பரதநாட்டிய சம்பிரதாய நடன நிகழ்ச்சிகளில் அலாரிப்பு, ஜதீஸ்வரம், சப்தம், வர்ணம், பதம், கீர்த்தனை, அஷ்டபதி, ஜாவளி, தில்லானா, விருத்தம் என்பன இடம்பெறும்.
- ❖ நடைமுறையில் அலாரிப்பிற்கு முன்னதாகவோ, அன்றி அலாரிப்பிற்கு பதிலாகவோ கணேசர் அஞ்சலி (ஸ்துதி), புஸ்பாஞ்சலி, குருபதாஞ்சலி போன்ற நாட்டிய அஞ்சலி நிகழ்வுகளையும், மல்லாரி, கௌத்துவம், தோடய மங்களம் போன்ற தெய்வீகம் சார் நாட்டியங்கள், குலதெய்வ வழிபாடு நடன உருப்படிகளுக்கு நாட்டியம் அமைத்து ஆடும் வழக்கமும் நாட்டிய கலையில் வளர்ச்சி கண்டுள்ளது.
- ❖ கர்நாடக இசையில் அமைந்த பாடல்களுடன் மிருதங்கம், வயலின், புல்லாங்குழல், நட்டுவனாரின் நட்டுவாங்கத் தாளத்தின் கணீர் ஒலியுடன் பரதநாட்டிய நிகழ்ச்சி நடைபெறும்.
- ❖ நாட்டியத்தின் நிலை அரைமண்டி
- ❖ நடனபாணிகளாக பந்தனை நல்லூர் பாணி, தஞ்சாவூர் பாணி, வழுவூர் பாணி காணப்படுகிறது.
- ❖ பரநாட்டியத்திற்கு பயன்படுத்தப்படும் ஆடை பஞ்சகச்சமாகும்.
- ❖ பரதநாட்டியத்தில் பக்கவாத்திய கலைஞர்கள் வலது பக்கம் அமரவேண்டும் என ருக்மணிதேவி அருண்டேல் கூறியுள்ளார்.
- ❖ பரதநாட்டியத்திற்து பங்களிப்பு செய்த கலைஞர்களாக ஸ்ரீமதி ருக்மணிதேவி அருண்டேல், தஞ்சை நால்வர், கனம் கிருஷ்ணய்யர், வழுவூர் இராமையாப்பிள்ளை, கலாநிதி மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தஞ்சாவூர் க.பொன்னையாபிள்ளை, ஸ்ரீமதி பாலசரஸ்வதி, கனம் ஈ கிருஷ்ணய்யர் போன்றோரைக் குறிப்பிடலாம்.

**(06 புள்ளிகள்)**

7. பின்வருவனவற்றிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) அடவு

(ii) கௌத்துவம்

(iii) ஏந்தல் நடனம்

(i) அடவு

- ❖ நாட்டியத்தின் பலவித அங்க அசைவுகளின் தொகுப்பை அல்லது கூட்டுச் சேர்க்கை அசைவுகளைக் குறிப்பிடுவதே அடவு என்று சொல்லப்படும்.
- ❖ அதாவது இசையில் பயிற்சி வடிவங்களான சரளி, ஜண்டை வரிசைகள் இருப்பதைப் போல, நடனத்திலும் பயிற்சி, ஆடல் அசைவு வடிவங்களாகத் திகழ்வது அங்க அசைவு சேர்க்கைகள் என்னும் அடவுகளாகும்.
- ❖ அடவுகள் உணர்வுகளை அல்லது குறிப்பை உணர்த்தும் சைகையாக விளங்குகின்றன. சைகைகளின் மூலம் ஆட்டத்தில் பல்வேறு மாறுதல்கள் உண்டாக்கி அதில் ரசனையையும் பாவத்தையும் ஏற்படுத்தி, ஜதி சொற்கட்டுகளுடன் ஆடப்பெறுகின்றன.
- ❖ நாட்டியத்தின் சிறப்பையும் உயர்வையும் நிர்ணயிக்கவல்லது அடவுகளே ஆகும்.
- ❖ நட்டுவனார் அடவுகளின் மூலம் நாட்டியத்திற்கு அடித்தளமிடுகின்றனர்
- ❖ அடவு என்பது அங்க அசைவுகளுக்கு ஏற்ப காலடிகளைச் சீராக எடுத்துவைத்து ஆடுவது எனச் சொல்லலாம்.
- ❖ அடவுகளே ஒரு நாட்டியத்தின் அபிநயத்திற்கு அடித்தளமிடும் சைகைகளாக விளங்குகின்றன.
- ❖ ஒவ்வொரு அடவிலும் ஸ்தானகபேதம், சாரிபேதம், நிருத்த ஹஸ்தம், கண் அசைவு, தலையசைவு, கழுத்தசைவு, என்பன அடங்கி இருக்கும்.
- ❖ அடவுகள் விளம்ப, மத்திம, துரித காலங்களில் செய்யலாம்.
- ❖ அடவுகளில் வன்மையான அடவு, மென்மையான் அடவு வகைகள் உண்டு.

**(04 புள்ளிகள்)**

(ii) **கௌத்துவம்**

- ❖ கயிலையில் சிவன் ஆடும் போது, எல்லாத் தேவர்களும் அவரை வணங்கி வரங்கள் பெற்றுச் சென்றனர். நந்திகேஸ்வரர் மட்டும் எதுவும் கேட்கவில்லை. அதனால் சிவபெருமான் தானே சென்று நந்திகேஸ்வரரிடம் உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். அதற்கு நந்திகேஸ்வரர் தனக்கு மட்டும் தனியாகச் சிவன் நடனம் புரிந்து காட்ட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். சிவன் பிரதோஷ வேளையில் நடனம் ஆடினார். சிவனின் அந்த நடனமே கௌத்துவம் ஆகும்.
- ❖ இதன் அமைப்பு தற்கால வழக்கில் உள்ள இலட்சணகீத அமைப்பில் முதலில் ஜதியும் பின்னர் சாகித்தியமுமாக அந்தந்த தேவர்களைப் புகழ்ந்து அமைந்துள்ளது.
- ❖ சிலப்பதிகாரத்தில் கடலாடு காதையில் மாதவி நிலாக் கௌத்துவத்தைப் பயன்படுத்தினாள் என அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டுள்ளார்.
- ❖ நவசந்தி கௌத்துவம், இந்திரன், குபேரன், வாயு, அக்கினி போன்றவர்கள் மீது எழுதப்பட்டுள்ளது.

- ❖ கௌத்துவம் என்ற உருப்படி பற்றிய செய்திகளைக் கையளிப்பதற்குப் பயன்படுத்தப்பட்ட முழவின் சொற்களைப் பொருள்பட தொடர்பாடல் மொழிக்கு மாற்றியதன் விளைவாகக் கௌத்துவம் தோற்றம் பெற்றது.
- ❖ கவண் பாடுதல் அன்றேல் பிரிபடுதல் என்ற எண்ணக்கருவின் அடிப்படையாகத் தோற்றம் பெற்றது.

**(04 புள்ளிகள்)**

(iii) **ஏந்தல் நடனம்**

- ❖ வீட்டுப் பாவனைப் பொருட்களை ஏந்தி ஆடுதல் ஏந்தல் நடனம் எனப்படும்.
- ❖ செம்பு, சுளகு, பானை, கொத்து, விளக்கு, பட்டுத்துணி, மாலை, மலர்ப்பந்து, கூடை, கடகம், சங்கு, தாம்பாளம், சாமரம், குடம் போன்ற பொருட்களை ஏந்தியும் எறிந்தும் கைமாறிக் கொடுத்தும் ஆடுதல்.
- ❖ ஏந்தல் நடனத்தின் சிறப்புப் பண்புகளில் ஒன்று எண்ணிக்கையுடன் தொடர்புடைய ஆடலாகும்.
- ❖ ஏந்தல் நடனத்தின் இன்னுமொரு சிறப்புப் பண்பு ஆடுவோர் ஒருவரோடொருவர் இசை பொருந்த உரையாடி ஆடுதல்.
- ❖ இந்நடனத்திற்கு டோல்கி, தபேலா, புல்லாங்குழல், மத்தளம் என்பன பயன்படும்.

**(04 புள்ளிகள்)**

**(மொத்தம் 12 புள்ளிகள்)**